*Nam nāṭu*

*Malar 3, itaḻ 201*

*February 06, 1956*

Record no. 1131

REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: [illegible]

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ✶ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை தை 24 திங்கள் (6 2 -56) ★ ★ வெளியூர் : தை 25உ செவ்வாய் (7—2—56) [இதழ் 201

## இன்னும் 60 கோடி பேருக்குச் சீனாவில் இடம் உள்ளதாம்!

ஹாங்காங், பிப். 3—

'இன்னும் குறைந்தது 60 கோடி மக்களுக்குச் சீனாவில் வாழ இடமிருக்கிறது' என்று, சீன ஆலோசனை போர்டின் உயர் தர அதிகாரியான சென்போ-தா என்பார் பீகிங்கில் கூறியுள்ளார்.

'மக்கட் தொகைப் பெருக்கத்தாலும், உணவுப் பற்றுக் குறையாலும் சீனா ஆக்கிரமிப்பு நடத்தும் என்று வெளிநாட்டவர் கூறுவது, வெறும் பிரச்சாரம்தான்' என்றும் கூறப்படுகிறது.

# 'வடக்கும்-தெற்கும் ஒன்றுபட முடியாததேன்?'

## சர்தார் பணிக்கர் ஆராய்ச்சி

### போதுமான தொடர்புகள் இல்லாததுதானும்!

வடநாடு, தென்னாட்டின் மீது ஆதிக்கம் செலுத்துவதாகச் சொல்லப்படுகிறதாம்! அது குறித்து சர்தார் பணிக்கர் பேசினாராம்!

"வடக்கு—தெற்கு என்ற வேறுபாடுகள் எல்லா நாடுகளிலுமிருந்திருக்கின்றன" என்று அவர் கூறினாராம்!

(தொடர்ச்சி 4-ம் பக்கம் பார்க்க.)

## நாளை!

சென்னை — மண்ணடியில் நடைபெற்ற மாநில மாநாட்டு நிதியளிப்புக் கூட்டத்தில், அண்ணா அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு நாளை வெளிவரும்.

## வடக்கு-தெற்கு ஒற்றுமை உருவாக!

### இராமசாமி அய்யர் தரும் 'யோசனை'

புதுடில்லி, பிப். 3—

"வடக்கே கங்கையிலிருந்து தெற்கே காவிரி, தாமிரபரணி நதி வரையில் ஒரு பொதுவான ஆற்றுப் போக்குவரத்து ஏற்படுத்த வேண்டும்; அல்லது, மின்சார உற்பத்தித் திட்டம் அமைக்க வேண்டும்; அப்போதுதான், இந்தியாவில் நிரந்தர ஒற்றுமையைப் பெற முடியும்.

"இந்தியா முழுமையும் உள்ளடக்கக்கூடிய அப்படி ஒரு பெரிய விரிவான திட்டத்தின் மூலம்தான் இந்தியாவின் ஒற்றுமை, பொருளாதார ஒற்றுமை பற்றிய சிக்கலுக்குச் சரியானதோர் விரைவான பரிகாரம் காண முடியும் என்று நான் உணர்கிறேன்.

"சோவியத் ரஷ்ய மக்களை, வால்கா நதிக் கால்வாய் ஒன்றுபடுத்தியிருக்கிறது; ரஷ்யாவில் அப்படிச் செய்யப்பட்டிருக்கும் முறை இந்தியாவிலும் முயற்சித்துப் பார்க்கப்பட வேண்டும்,"

என்று டாக்டர் சி. பி. இராமசாமி அய்யர், 'இந்தியாவின் அடிப்படை ஒற்றுமை' என்பது குறித்துப் பேசுகையில் குறிப்பிட்டாராம்.

மேலும் அவர் குறிப்பிட்டதாவது :—

"இந்திய மக்களை, சமஸ்கிருதம்)பும், 'கர்மா' என்ற தத்துவமும் ஆட்கொண்டிருந்தன; இவை, இந்திய மக்கள் உலகப் பிரச்சினைகளை அணுகுவதில் ஒருமை மனப்பான்மை உண்டாக்கியிருக்கின்றனர்; ஆனால், அவை அரசியல், பொருளாதார ஒற்றுமைகளை உருவாக்குவதில் வெற்றி பெறாது போய்விட்டன.

"புதிய அரசியல் பொருளாதாரத் தொடர்புகளை உருவாக்குவதின் மூலம் ஒற்றுமைப் பிரச்சினைக்கு வழி கோல வேண்டும்.

"ஆனால், உறுதியான பலம் வாய்ந்த மத்திய சர்க்கார்

(4-ம் பக்கம் பார்க்க)

# 'நாயும் அறியும் மண் அருமை; நாட்டின் நாயகர் அறியாதது ஏன்?'

## அண்ணா சங்கநாதம்

மொழிவழி அரசு—தேவிகுளம், பீர்மேடு—சென்னை சர்க்காரின் அக்கரையின்மை, பிப். 20 பொது வேலை நிறுத்தம் முதலியவை குறித்து கடந்த 31—1—56 அன்று, சென்னை வண்ணையம் பதியில் அண்ணா அவர்கள் ஆற்றிய பேருரையின் இறுதிப் பகுதி இங்கு தரப்படுகிறது:—

"நாய்க்குக்கூட மண்ணின் அருமை தெரிகிறது. கண்ட கண்ட இடத்தில் மலம் கழிக்கும் நாய் வெறி நாயாகும்; புத்தியுள்ள நாய், முதலில் மண்ணை முகர்ந்து பார்த்து, தனக்குப் பிடித்தமான மண்ணாயிருந்தால்தான் அங்கு மலம் கழிக்கும்.

"ஆனால் நாட்டின் நாயகர்களுக்கு மண்ணின் அருமை —தேவிகுளம், பீர்மேடு வட்டங்களின் செல்வப் பெருமை தெரியாமற்போனது ஏன்?

"மந்திரிகள் மட்டும்தான் இன்று, தேவிகுளம் பீர்மேடு பற்றி உணர்வு பெறாதவர்களாயிருக்கின்றனர். நாம் பேசுவதைக் கேட்டு, வீட்டிலிருக்கும் பசுவும் கன்றும் கூட 'அம்மா, அம்மா' என்று குரல் தருகின்றன — 'தேவிகுளம் பீர்மேடு தமிழருக்குத்தான்' என்று கூறுவதுபோல!

"பயங்கரக் காடுகளாயிருந்த அந்த மலைப் பிரதேசம் பலன் தருகிற தேயிலைத் தோட்டங்களாக — ரப்பர் தோட்டங்களாக — ஏலம், கிராம்புத் தோட்டங்களாக மாற்றப்பட்டிருக்கின்றன; மாயத்தாலே அல்ல —மந்திரத்தாலே அல்ல— தமிழர் தம் இரத்தத்தால், வியர்வையால், உழைப்பால்!

"நமது மூதாதையர் உழைத்துப் பண்படுத்திய அந்தப் பாங்கான பகுதிகளைத்தான், சென்னை மந்திரிகள், 'போனால் என்ன' என்று பேசுகிறார்கள்.

"பாலைவனமாகவே தான் இருக்கட்டும் அவை — தேவிகுளமும், பீர்மேடும்; 'உரிமை' என்று வரும்போது, 'என்னுடைய நாடு' என்று பேசுவதற்கு வாதாட்டம் என்ன தேவை? அதற்கு மனித உள்ளமல்லவா தேவை? நாட்டுப் பற்றல்லவா வேண்டியது? மொழிப் பற்றல்வா வேண்டும்? ஜனநாயக கோட்பாடு பற்றிய அறிவல்லவா வேண்டும்?

"'என்னுடைய நாடு எனக்கு வேண்டும்' என்று கூறுவதற்கு, வாதங்களல்லவே தேவையானது?

"அதனால்தான், எல்லா எதிர்க்கட்சியினரும் ஒன்று

(4-ம் பக்கம் பார்க்க)

# சர்வகட்சி கூட்டணி முடிவுகள்

## பிப். 20 பொது வேலைநிறுத்தத்திற்கான முன்னேற்பாடுகள்

சென்னை, பிப். 6—

திரு—கொச்சி, ஆந்திரத்தில் பிணைக்கப்பட்டிருக்கும் தமிழ்ப் பகுதிகளைத் தாய்த் தமிழகத்துடன் இணைக்கவும், 'தட்சிணப் பிரதேசம்' என்ற உருப்படாத யோசனையை நிராகரித்துத் தடுக்கவுமான முயற்சிகளுக்கு 27—1—56 அன்று சென்னையில் நிறுவப்பட்ட சர்வ கட்சியினர் கொண்ட குழுவினர் கூட்டம் இன்று காலை 10-30 மணிக்கு மவுண்ட் ரோட் காஸ்மாபாலிடன் கிளப் கட்டிடத்தில் நடைபெற்றது.

கூட்டத்திற்கு திரு. பி. டி. இராசன் அவர்கள் தலைமை தாங்கினார்.

தனி அழைப்பின் பேரில் அண்ணா அவர்களும் கலந்து கொண்டார்.

பிப்ரவரி 20-ந் தேதி பொது வேலை நிறுத்தம் வெற்றிகரமாக நடைபெறுவதற்கான திட்டங்கள் வகுக்கப்பட்டன.

1. பிப்ரவரி 20-ந் தேதியன்று பொது வேலை நிறுத்தம், கடையடைப்பு ஆகியவை வெற்றிகரமாகவும், அமைதியாகவும் நடைபெறும் பொருட்டு, தொழிற் சங்கங்கள், மாணவர் சங்கங்கள், பத்திரிகை அலுவலகங்கள், வர்த்தக நிறுவனங்கள், மற்றும் அவசியமான நிறுவனங்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகளைச் சந்தித்து அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெற ஆவன செய்யுமாறு செயலாளர்களுக்கு அதிகாரமளிக்கிறது.
2. பிப்ரவரி 20—பொதுவேலை நிறுத்தத்திற்கான காரணங்களை விளக்கிப் பொதுமக்களுடைய ஒத்துழைப்பைக் கோரக்கூடிய அறிக்கையைத் தயாரித்து வெளியிடுமாறு செயலாளர்களுக்கு இக்குழு அதிகாரமளிக்கிறது.
3. பிப்ரவரி 20-ந் தேதியன்று நடைபெறவிருக்கும் சர்வ கட்சிப் பொதுக்கூட்டத்தில், சர்வகட்சி சார்பில் நிறைவேற்றுவதற்கான உறுதிமொழியைத் (பிரதிக்ஞை) தயாரித்து அதனை குழுவின் ஒப்புதலுக்கு வைக்குமாறு செயலாளர்களைக் கேட்டுக்கொள்கிறது.
4. பிப். 19-ந் தேதியன்று ஒவ்வொரு ஊரிலும், சர்வ கட்சிகள் சார்பில் பொதுக் கூட்டங்கள் நடத்திப் பொதுமக்களுக்கு வேண்டுகோள் விடுமாறு செய்வதென இக்குழு தீர்மானிக்கிறது.
5. பிப். 20-ந் தேதியன்று மாலை சர்வ கட்சி ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடத்தி, அப்பொதுக் கூட்டத்தில், சர்வ கட்சி கூட்டணி சார்பில் அனுப்பப்படும் பிரதிக்ஞையை மட்டும் வாசித்து உறுதி எடுத்துக் கொண்டு கலைந்து விட வேண்டுமென பொதுமக்களையும், குறிப்பாக சர்வ கட்சிக் கூட்டணியில் இடம் பெற்றுள்ள அமைப்புகளையும் இக்குழு கேட்டுக் கொள்கிறது.
6. எல்லாக் கட்சிகளின் அமைப்புகளையும் கொண்ட இக்குழு, 'சர்வகட்சி கூட்டணி' என்ற பெயருடன் இயங்குவதென்று தீர்மானிக்கிறது.
7. அவசர வேலைகளைக் கவனித்து அவ்வப்போது ஆவன செய்ய குழுவின் தலைவர் பி. டி. இராசன், செயலாளர்கள் ம. பொ. சிவஞானம், என். வி. நடராசன், ப. ஜீவானந்தம், எஸ். சி. சி. அந்தோணி பிள்ளை, சின்னசாமி, பொருளாளர் உமாபதி ஆகியோரைக் கொண்ட செயற் குழு நிறுவப்பட்டது.
8. சர்வ கட்சி கூட்டணி சார்பில் நடைபெறுகிற வேலைத் திட்டங்களுக்காக ரூ. 10,000 நிதி திரட்டுவதென்று முடிவு செய்யப்பட்டது.

• • •

தோழர் வி. வி. இராமசாமி, எம். எல். சி. இக்குழுவின் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார்.

கூட்டத்திற்கு வந்திருந்த உறுப்பினர்கள் :—

பி. டி. இராசன், ம. பொ. சிவஞானம், ப. ஜீவானந்தம், என். வி. நடராசன், ஜி. உமாபதி, பாரதிதாசன், இரா. நெடுஞ்செழியன், சுயம்பிரகாசம், எம்.எல்.ஏ., கே. விநாயகம், எம்.எல்.ஏ., வி. சீனிவாசன், ஏ. எஸ். கே. அய்யங்கார், சின்ன அண்ணாமலை, ஏ. ரத்தினம், எம்.எல்.ஏ., சுந்தரராசன், [illegible] டி. கே. சண்முகம், பிள்ளை [illegible] யோர்.

## காமராசர் தலை அசைத்து விட்டாராம்!

காமராசர், தட்சிணப் பிரதேசத் திட்டத்திற்குத் தலை அசைத்துவிட்டார் என்றும், அமிர்தசரஸ் காங்கிரசிற்குப் பிறகு அது அறிவிக்கப்பட்டு விடும் என்றும் அரசியல் வட்டாரத்தில் பேசிக்கொள்ளப்படுகிறது.

கன்னடத்தைத் தட்சிணப் பிரதேசத்தில் சேர்க்க, மைசூர் முதலமைச்சர் கண்டிப்பாக மறுத்துவிட்டாராம்.

காமராசர் மட்டும், நேருவுக்கு நல்ல பிள்ளையாகும் நோக்குடன், இணங்கிவிட்டாராம்!

கன்னடம் சேராவிட்டாலும், சென்னையும், திரு-கொச்சியும் இணைந்து ஓர் அரசாக ஆகுமாம்!!

தட்சிணப் பிரதேசத்திற்கு, இப்போதே காமராசர், 'நண்பர்'களிடம் ஆதரவு தேடுகிறார் என்று கூறப்படுகிறது.

'பெரியார் பலமாக எதிர்க்கிறாரே,' என்று காமராசருக்குக் கவனப்படுத்தப்பட்டபோது, 'பார்க்கலாம்' —என்று பதிலளித்தாராம்!

Best copy available.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் — ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்
சென்னை 6-2-'56 திங்கள்

# தட்சிணப் பிரதேசம்!

★

தாங்கள் அடிமை கொண்டுள்ள மக்கள், தங்களது ஆதிக்கத்திற்கு எதிராகக் கிளர்ந்தெழுந்து விடுதலை முழக்கமிடும்போது, அந்த மக்களின் ஆதிக்க எதிர்ப்பில் ஆழ்ந்து கிடக்கும் சிந்தனையை மாற்றி—கவனத்தைத் திசை திருப்பி—ஒற்றுமை உணர்வைச் சிதறடித்து—அணியைப் பிளந்து அவர்களுக்குள்ளாகவே சண்டையிட்டுக்கொண்டிருக்கச் செய்வதற்கு ஏகாதிபத்தியங்கள் மேற்கொள்ளும் நடவடிக்கைகள், இதுகாறும் எழுதப்பட்டுள்ள மனித சமூக, அரசியல் வரலாற்றில் துவக்கமுதலே 'ராஜதந்திரச் செயல்கள்' என்ற வர்ணனையுடன் காணக் கிடப்பவையாகும்.

இந்த 'ராஜதந்திரங்களை' உலகில் மிகவும் பிற்போக்கான மக்கள் என்று கருதப்படுபவர்கள்கூட, தங்களுக்குச் சுதந்திரச் சுடரொளி கிடைக்கவில்லை; அடிமை இருளில் அவதியுறுகிறோம்—என்பதை உணர்ந்த நிலையில் தெளிவாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். ஏகாதிபத்தியங்களின் அத்தகு கேவலமான 'ராஜதந்திரங்களை'ச் செயல்படுத்தவிடாது வீராவேசத்தோடு ஆதிக்க எதிர்ப்புப் போரில் ஈடுபட்டுத் தியாகத் தழும்பேற்றுக்கொண்டிருக்கிறார்கள் இந்த இருபதாம் நூற்றாண்டில், அடிமைப்பட்ட மக்கள்.

இந்த நிலையில்தான் வடநாட்டு டில்லி ஏகாதிபத்தியவாதிகள், அந்த 'ராஜதந்திரங்களை'த் தென்னாட்டில்—திராவிடத்தில் செயல்படுத்தக் கனவு காண்கிறார்கள்.

மக்களை அடிமை கொள்வதிலும், அவர்களைச் சுரண்டுவதிலும், அவர்கள் கிளர்ந்தெழும்போது அடக்கி ஆள்வதிலும் நீண்ட கால அனுபவமும், உலக முன்னேற்றத்திற்குப் பெருமளவில் உதவும் விஞ்ஞான அறிவும், பிற மக்களை அடிமை கொண்டாலும் உள்நாட்டு மக்கள் சுதந்திரத்துடன் சுகமாக வாழ வேண்டும் என்ற உயர் எண்ணமும் கொண்டு விளங்கிய பெரும் ஏகாதிபத்தியங்கள் எல்லாம்கூட, எத்தனை நவீன ஆயுதங்களைக்கொண்ட பெரும் இராணுவ அணிவகுப்பு—ஏகாதிபத்தியம் நீடிக்கச் செய்வதற்கான புதிய 'ராஜதந்திரங்களை'ப் பிறப்பிக்கும் மூளை—இவை இருந்தாலும் தனது ஆதிக்கம் நீண்ட காலத்திற்கு ஜீவனோடு நிலைபெற முடியாது என்பதை உணர்ந்திருக்கின்றன; அல்லது, அவை தொடர்புடைய மக்களால் உணர்த்தப்பட்டிருக்கின்றன.

புதிதாக முளைத்துள்ள டில்லி ஏகாதிபத்தியத்தின் மூலவர்கள் எத்தன்மையவர்? எட்டாண்டுகளுக்கு முன்புவரை, வெள்ளை ஏகாதிபத்தியத்தின் அடிமைகளாயிருந்தவர்; படையெடுத்து வந்தவர்களுக்கெல்லாம் 'பரிவட்டம்' கட்டி, பூரணகும்ப மரியாதை செய்து, 'ஜெய் ஜெய்' பாடி, அவர்முன் மண்டியிட்டு, கைகட்டி, வாய்பொத்திக் குற்றேவல் புரிந்து கொண்டிருந்த கோழைகள்—என்று, இரண்டாயிரம் ஆண்டு கால வரலாற்றில் இடம் பெறும் இந்தோ-ஆரிய இன மக்களின் நிகழ்காலச் சந்ததியினர்தானே, இன்றைய வடநாட்டவர்! இந்தக் கோழைகளின் குலத்தோன்றல்கள்தான், மறக்குடிப் பிறந்த மக்களை—வீரர் பரம்பரையை—திராவிடரை, தமக்குச் சாதகமாகிவிட்ட சந்தர்ப்பத்தாலும், திராவிடரின் கவனக் குறைவாலும் தங்கள் கையில் சிக்கிவிட்ட ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்துகொண்டு, கட்டியாள நினைக்கின்றனர், நீண்ட நெடுங் காலத்திற்கு!

அனுபவமும், அறிவும் ஆற்றலும்கொண்ட பெரும் ஏகாதிபத்தியங்களின் புரிந்துகொள்ள முடியாத — கடினமான — சூழ்ச்சி நிறைந்த 'இராஜ தந்திரங்கள்' எல்லாம் உருத் தெரியாமல் ஆக்கப்படும்போது, இந்தக் 'கத்துக்குட்டி' டில்லி ஏகாதிபத்தியவாதிகள், 'கண்ணை மூடிக்கொண்டு பாலைக் குடித்தால் உலகமே இருண்டுவிடும்,' என்று திருட்டுப் பூனை எண்ணுவதுபோல, 'நாம் எது செய்தாலும் தென்னவர்களுக்குப் புரியாது—தெரியாது—தடையின்றி ஏற்றுக் கொள்வார்கள்' என எண்ணிக்கொண்டு, சில பல நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார்கள்; அது கண்டு நாம் பரிதாபப்படுகிறோம்!

'தட்சிணப் பிரதேசம்' என்ற ஒரு உருப்படாத யோசனையை வெளியிடச் செய்து, இன்று அதனைச் செயலாற்றத் துடிக்கும் டெல்லியின் போக்கு எதனைக் காட்டுகிறது?

தென்னாட்டில் மொழிவழியாகத் திராவிட மக்கள் பிரிந்து, இனவழியாக ஒன்றுபட்டுவிடுவார்களேயானால், தங்களது ஆதிக்கத்திற்குச் 'சாவுமணி' அடிக்கப்படுவதாக அமையும் என்ற அவர்களது அச்சத்தை எடுத்துக்காட்டவில்லையா?

திராவிட மக்களை சுமூகமான உறவுடன் வாழவிடாது, சிறு சிறு தகராறுகளில்—எல்லைகள் நிர்ணயம், நிர்வாகம், பதவி போன்றவைகளுக்கான தகராறுகளில் ஈடுபட்டுக் கொண்டிருக்குமாறு செய்துவிட்டால், தங்களது ஆதிக்கத்திற்கு எதிராக வேர்விட்டுள்ள விடுதலை எண்ணம் சிதைந்துவிடும் என்று கனவு காண்கிறார்கள் போலும்!

'தட்சிணப் பிரதேச' யோசனை, தென்னகத்து மக்களின் சம்மதத்தைப் பெற்றதல்ல; அதனை ஒருக்காலும் தென்னாட்டு மக்கள் ஏற்கமாட்டார்கள் என்பதை மட்டும், துடித்துக் கிடக்கும் டில்லி—அவர்களின் துடிப்பிற்குப் 'பதம்' பாடும் சென்னை ஆட்சியாளர்—சில குறுகிய ஆசைகளுக்குப் பலியாகிவிட்ட பணம்பள்ளி போன்றோருக்கு இடித்துரைக்க விரும்புகிறோம்.

## வேலை தேடுவோர் எண்ணிக்கை வளருகிறது!

### பெயர்ப் பதிவு பற்றிய விவரங்கள்

புதுடில்லி, பிப். 5—

1955 டிசம்பர் மாதக் கடைசி தினத்தன்று வேலை தேடித் தரும் நிலையங்களின் அன்றாடப் பதிவுப் புத்தகங்களில் மொத்தம் 6,91,958 பேர் பதிவாகியிருந்தனர்; 1955 நவம்பர் மாத இறுதியில் இருந்ததைக்காட்டிலும் இது 10794 அதிகம் ஆகும். இந்த எண்ணிக்கையில், மாத இறுதியில் வேலை பெற்ற 4,990 பேரும் அடங்கியிருந்தனர்.

பரிசிலனை மாதத்தில், வேலை தேடித் தரும் நிலையங்களில் மொத்தம் 1,47,996 பேர் பதிவு செய்துகொண்டனர்; முந்திய மாதத்தில் 1,29,227 பேர் பதிவாகியிருந்தனர். பெயர் பதிவு செய்துகொண்டவர்களின் எண்ணிக்கை உயர்வு—உத்திரப் பிரதேசம், பம்பாய், டில்லி மத்தியப் பிரதேசம், பீகார், சென்னை, பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் அதிகமாக இருந்தது.

இந்தியாவிலுள்ள வேலை தேடித் தரும் நிலையங்கள், 1955 டிசம்பர் மாதத்தில் மொத்தம் 16,817 பேருக்கு வேலை தேடிக் கொடுத்தன; அதற்கு முந்திய மாதத்தில் 14,856 பேருக்குத்தான் வேலை தேடித் தரப்பட்டது.

இம்மாதம் வேலையில் அமர்த்தப்பட்டவர்களில் 6,319 பேர் மத்திய சர்க்கார் இலாகாக்களிலும், 6,788 பேர் மாநில சர்க்கார் இலாகாக்களிலும், 3,710 பேர் சர்க்கார் சம்மந்தமற்ற இதர நிறுவனங்களிலும் அமர்த்தப்பட்டனர்.

அவர்களில் 2,769 பேர் மாதம் ரூ. 101-ம் அதற்கும் மேற்பட்ட ஊதியமுள்ள வேலைகளிலும், 8,078 பேர் மாதம் ரூ 61-க்கு மேற்பட்டும் ரூ. 101-க்குக் குறைந்தும் ஊதியமுள்ள வேலைகளிலும், 5,693 பேர் மாதம் ரூ. 30-க்கு மேலும் ரூ 61-க்குக் குறைவாகவும் ஊதியமுள்ள வேலைகளிலும், 277 பேர் மாதம் ரூ 30-க்குக் குறைவாக ஊதியமுள்ள வேலைகளிலும் அமர்த்தப்பட்டனர்.

## அரிசி உற்பத்தி பற்றி சில தகவல்கள்

புதுடில்லி, பிப் 5—

இவ்வருடத்தில் 7 23 32 000 ஏக்கராவில் சாகுபடி செய்யப்பட்டிருக்கிறதென்றும், உற்பத்தி மொத்தம் 2,37,75,000 டன் கிடைக்கக்கூடுமென்றும் தெரியவருகிறது.

1954—55-ம் ஆண்டில் இரண்டாவது மதிப்பீட்டில் சாகுபடி பரப்பளவு 6 94,56,000 ஏக்கராவும், உற்பத்தி 2,21,26,000 டன்னுமாக இருந்தன. எனவே, நடப்பு ஆண்டில் சாகுபடி பரப்பளவு 28,76,000 ஏக்கராவும், உற்பத்தி 16,49,000 டன்னும் உயர்ந்துள்ளன.

திருவாங்கூர்-கொச்சி மாநிலத்தில் 1955—56-ம் ஆண்டில், 10,67,000 ஏக்கராவில் சாகுபடி செய்யப்பட்டிருக்கிறதென்றும் உற்பத்தி அளவு 5,47,000 டன் இருக்குமென்றும் தெரியவருகிறது.

## அமெரிக்கா தயாரிக்கும் 'நீர்வளிக் குண்டு'

வாஷிங்டன், பிப். 3—

1945-ம் ஆண்டில் ஹிரோஷிமாவை அழித்த அணுகுண்டைவிட 2500 மடங்கு சக்தியுள்ள 'நீர்வளிக்' குண்டைத் தயாரிப்பதற்கு அமெரிக்கா முனைந்திருக்கிறதாம்!

தானே இயக்கும் ஆயுதங்களை சோவியத் ரஷ்யா கண்டுபிடித்துக் கொண்டிருக்கலாம் என்றும், எனவே, அவற்றின் தாக்குதலைப் பற்றி முன்னதாகவே எச்சரிக்கை செய்யும் 'ராடார்' ஏற்பாட்டையும் அமெரிக்கா பூர்த்தி செய்யும் என்றும் கூறப்படுகிறது.

## இமயமலையில் ஏற பெண்கள் குழு!

கூலு — லஹௌல் — ஸ்பிதி பகுதியிலுள்ள பனிச் சிகரங்களை ஆராய திருமதி ஜாய்ஸ் டன்ஸீதின் தலைமையில் ஒரு பிரிட்டிஷ் பெண்கள் குழு இந்தியாவுக்கு வருகிறது. குழுவில் ஐந்து பெண்கள் இருக்கிறார்கள்.

பனிச் சிகரங்களை ஆராய இவர்கள் திட்டமிட்டிருக்கிறார்கள்.

## வடநாட்டில் தொழில் வளர்ச்சி

### அசாமில் புதிய எண்ணெய்க் கிணறுகள்

அசாம் பள்ளத்தாக்கில் புதிய எண்ணெய்க் கிணறுகள் தோண்டுவதில் 'அசாம் ஆயில் கம்பெனி' தீவிரமாக ஈடுபட்டிருக்கிறது.

இதுவரை தோண்டிய 11 கிணறுகளில் மூன்று கிணறுகள் பாழாகியுள்ளன.

சமீபத்தில் நாகோர்கடியாவில் தோண்டப்பட்ட கிணற்றில் 10,000 அடிகளுக்குக் கீழே நல்ல ஊற்று கிடைத்தது. அக்ரிஜான் பகுதியில் மேலும் சில கிணறுகள் தோண்டப்பட்டு வருகிறது.

தேயிலைத் தோட்டங்கள் நிறைந்த மோரான் பகுதியிலும் எண்ணெய் ஊற்றுக்கள் இருக்கக்கூடும் என்று தெரிகிறது. வரும் மார்ச் மாதத்தில் அங்குக் கிணறு தோண்டும் வேலை தொடங்கப்படும்.

நாகோர்கடியாவில் தோண்டப்பட்ட கிணறுகளிலிருந்து எண்ணெயை இறைக்கவும், சாலை, கட்டிட வசதிகளைச் செய்யவும் வேலை நடந்து வருகிறது.

## மக்களுக்கு 'ஆத்மீக' உணர்வு ஊட்ட......!

### சாதுக்களைப் பயன்படுத்த முனைவார்களாம்!

பம்பாய், பிப். 2—

மக்களிடை ஒழுக்க நெறியை பரப்பவும், அவர்களுக்கு 'ஆத்மீக' உணர்வை ஊட்டவும், சாதுக்களைப் பயன்படுத்துவதற்குத் தன்னிடம் திட்டம் தயாராக இருப்பதாக மத்திய சர்க்கார் திட்ட அமைச்சர் குல்சாரிலால் நந்தா கூறியுள்ளார்.

இந்நாட்டில் சுமார் 10 இலட்சம் சன்னியாசிகள் இருப்பதாகவும், அவர்களால் சமூகத்திற்குச் சிறிதளவும் பயன் இல்லை எனக் கருதுவது தவறு என்றும் அவர் கூறியுள்ளார்.

நூல்களில் படிக்கமுடியாத பல நுண்ணறிவுகளை—'சத்' விஷயங்களை இந்தச் சாதுக்கள் உபதேசிக்க முடியும் என்று அவர் கூறுகிறார்!

### கோதுமைப் பொருள் ஏற்றுமதிக்குத் தடை

இந்திய சர்க்கார் கோதுமை மாவு, சிறு ரவை, பெரு ரவை ஆகிய கோதுமைப் பொருள்களின் விலைகள் ஏறுமுகமாக இருந்து வருவதை முன்னிட்டு, இவற்றை இந்தியாவுக்கு வெளியே ஏற்றுமதி செய்வதற்கு உடனடியாகத் தடைவிதிப்பதென முடிவு செய்திருக்கிறது.

---

இந்தியாவில் ஆண்டிற்குச் சுமார் 800 டன் நாரத்தம் புல் தைலம் தயாராகிறது. இத்தைலத்தை உலக நாடுகளுக்கு விநியோகம் செய்யும் பிரதான நாடு இந்தியாதான். இத்தைலம் சோப்பு பவுடர் முதலிய வாசனை அலங்காரப் பொருள்களில் உள்ள பல வாசனைப் பொருள்களைத் தயாரிப்பதற்கு மூலப் பொருளாகப் பயன்பட்டு வருகிறது.

---

இந்தியாவிலிருந்து முதல் தடவையாக, 1955-ம் ஆண்டின் கடைசி ஆறு மாத காலத்தில், சுமார் 78,800 டன் மோட்டார் ஸ்பிரிட்டும், 1,23,000 டன் உலை உபயோக எண்ணெயும் ஏற்றுமதி செய்யப்பட்டது. இவற்றை இறக்குமதி செய்த நாடுகளுள் பாகிஸ்தான், பர்மா, பிலிப்பைன் தீவுகள், ஆஸ்திரேலியா, இலங்கை ஆகியவை முதன்மையானவையாகும்.

## தொழிற் சங்கங்களை இணைக்கும் முயற்சி

### முறிந்துவிட்டதாகத் தகவல்

புதுடில்லி, பிப். 3—

இந்திய தேசிய இரயில்வே தொழிலாளர் தேசிய சங்கத்தின் தலைவரான எஸ். ஆர். வாசவதா, சங்கத்திலிருந்து சென்ற ஆண்டு பிரிந்து சென்று தனிச் சங்கம் வைத்துள்ள தோழர் குருசாமியுடன், இரு சங்கங்களையும் ஒன்று சேர்ப்பதற்காக நடத்திய பேச்சு வார்த்தைகள் முறிந்துவிட்டன என்று தெரியவருகிறது.

தேசிய சங்க செயற்குழுவினர் விதித்த நிபந்தனைகள் தோழர் குருசாமியால் ஏற்றுக்கொள்ளத் தக்கதாயில்லை என்பதால்தான் பேச்சு வார்த்தைகள் முறிந்ததாக வாசவதா தெரிவித்திருக்கிறார்.

தேசிய சங்கத்திலிருந்து வேறுபட்டிருக்கிற எல்லா சங்கங்களையும் இணைப்பதற்குத் தான் முயற்சி மேற்கொள்ளுவதாகவும் வாசவதா தெரிவித்திருக்கிறார்.

## இரயில் சொத்து பாதுகாப்புப் படை

### மசோதா ஒன்று வருமாம்!

நாடு முழுவதிலும் இரயில்வேயின் சொத்துக்களைப் பாதுகாப்பதற்கு, 'இரயில்வே பாதுகாப்புப் படை' ஒன்று ஏற்படுத்த தீர்மானிக்கப்பட்டுள்ளது.

இரயிலில் அனுப்பப்படும் சாமான்கள் காணமல் போய்விடுகின்றன; அல்லது சேதமாகின்றன. இதைத் தடுப்பதற்கு தற்போதுள்ள காவல் சிப்பந்திகளுக்கு அதிக அதிகாரங்கள் அவசியமாகின்றன. இதற்காகப் பாராளுமன்றத்தின் வரும் கூட்டத்தில் இரயில்வே பாதுகாப்பு மசோதா ஒன்று கொண்டுவரத் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

## ஊரறிந்த கொள்ளை!

கோரக்பூர்—

டிக்கெட்டில்லாத பிரயாணிகள் 25 பேர் இங்கு இரயில்வே நீதிபதி முன் குற்றஞ் சாட்டப்பட்டபோது அவர்கள் தங்களிடமிருந்து இரயில் வண்டியின் 'கார்டு' பணம் பெற்றுக் கொண்டதாயும், அவர் தங்களை 'டிக்கெட்டு' வாங்கவேண்டாமெனக் கூறியதாயும் நீதிபதியிடம் தெரிவித்தனராம். இது ஊரறிந்த கொள்ளைதானே!

### தாம்பரம்—விழுப்புரம் மின்சார இரயில் திட்டம்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ், தாம்பரத்திலிருந்து விழுப்புரம் வரை மின்சார இரயில் வசதியை விரிவாக்கும் திட்டம் நடைமுறைக்கு கொண்டுவரப்படும் என்றும், கைவிடப்படமாட்டாது என்றும் உறுதி செய்யப்பட்டிருக்கிறதாம்.



# கழகச் செய்திகள்

### சென்னை—9-வது வட்ட தி. மு. கழகம்

1—2—56 இரவு 10 மணிக்கு கழகப் பணிமனையில் நிர்வாக உறுப்பினர்கள் கூட்டம் பிப். 20-ந் தேதி போராட்டத்தை ஆதரித்தும், 14-2-56-ல் ஓர் பொதுக் கூட்டம் நடத்துவதென்றும், 20-ந் தேதி நடைபெறவிருக்கும் பொது வேலை நிறுத்தத்தைக் கழகச் சார்பில் சிறப்புற நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

### மாயூரம் தி. மு. கழகம்

27—2—56 மாலை 4 மணிக்கு, கிளைக் கழகச் செயற் குழுக் கூட்டம், தோழர் என். கிட்டப்பா தலைமையில் நடைபெற்றபோது, பிப். 20-ல் பொது வேலை நிறுத்தம் செய்வதெனவும், மற்றும் பல முக்கியத் தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### வைத்தீசுவரன்கோயிலில் கழகப் பொதுக்கூட்டம்

30—1—56 மாலை 6 மணிக்கு மேற்படி ஊர் தி. மு. கழகச் சார்பில், தோழர் என். கிட்டப்பா தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர்கள் க. அன்பழகன், அறிவுடைநம்பி, பொன் சொக்கலிங்கம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

### கடையநல்லூர் தி. மு. க.

24—1—56 இரவு 7 மணிக்கு மாவடிக்கால் மந்தைவெளி மைதானத்தில், தோழர் ப. சங்கரன் தலைமையில் நடைபெற்றப் பொதுக் கூட்டத்தில், தோழர்கள் வி. ஆறுமுகம், எஸ். எஸ். தென்னரசு ஆகியோர் பேசினர். பின்னர், மேற்படி திடலுக்கு, 'திரு. ரா. ராமசாமி திடல்' எனப் பெயரிடப்பட்டும், இதைப் பொதுமக்களும், மாற்றுக் கட்சித் தோழர்களும் ஆதரிக்கும்படி கேட்டுக்கொண்டும், மற்றும் சில தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### பந்தநல்லூரில் கொடியேற்று விழா

31—1—56 மாலை 5 மணிக்கு, பந்தநல்லூரைச் சேர்ந்த மேலக் காட்டூரில், தோழர் என். அசோகன் தலைமையில் கொடியேற்று விழா நடைபெற்றது. தோழர் அசோகன் தி. மு. கழக கொள்கைகளைப் பற்றி விளக்கிப் பேசினார்.

### அக்கிப்பேட்டை—பெங்களூர் தி. மு. கழகம்

29—1—56 மாலை 3½ மணிக்கு, தோழர் வி. கே. நடேசன் தலைமையில் நடைபெற்ற கிளைக் கழகச் செயற்குழுக் கூட்டத்தில், வருகிற மார்ச்சு திங்களில் கழகச் சார்பில் ஒரு பொதுக்கூட்டம் நடத்துவதெனவும், மற்றும் பல முக்கியத் தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### சீராமபுரம்—பெங்களூர் தி. மு. கழகம்

26—1—56ல், கழகக் கட்டிடத்தில், தோழர் சி. எம். தேவன் தலைமையில் நடைபெற்ற சொற்பயிற்சிக் கூட்டத்தில் 'மதங்கள்' எனும் பொருள் குறித்து தோழர்கள் பலர் சொற்பொழிவாற்றினர்.

### முத்துப்பேட்டை தி.மு.க.

2—2—56 இரவு 9 மணிக்கு சந்திரா போட்டோ ஸ்டுடியோவில் தோழர் ந. தருமலிங்கம் தலைமையில், தி. மு. கழகப் பொது உறுப்பினர்கள் கூட்டம் நடைபெற்றபோது, சிதம்பரத்தில் நடைபெற்ற பொதுக் குழுவின் தீர்மானங்களை ஆதரித்தும், பிப்ரவரி 20-ல் நடைபெறவிருக்கும் பொது வேலை நிறுத்தத்தை வெற்றிகரமாக ஆக்கவும், தீர்மானிக்கப்பட்டது.

### பண்ணைப்புரம் தி. மு. க.

18—1—56-ல் நடைபெற்ற கிளைக்கழகச் செயற்குழுக் கூட்டத்தில் தமிழக மக்களின் உரிமைக் குரலை உதாசீனம் செய்த நேருவின் சர்வாதிகாரத் தீர்ப்பை வன்மையாகக் கண்டித்தும், தமிழ் நாட்டின் எதிர்ப்பைத் தெரிவிக்குமுகத்தான் காமராசர் மந்திரி சபையைப் பதவி துறக்கக் கேட்டுக்கொண்டும், மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### உடுமலை நகர தி.மு. கழகம்

27—1—56ல் உடுமலை நகர தி. மு கழகச் சார்பில், ப்ரேவோ திடலில், தோழர் நவ. காளியப்பா தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர்கள் கோவை. இராசமாணிக்கம், ப. நாராயணன், என். வி. நடராசன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

### துறையூர் தி. மு. கழகம்

31—1—56 இரவு 9 மணிக்கு, கிளைக் கழகக் கட்டிடத்தில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில்; திரு—தமிழ்ப் பகுதிகளை மீட்பதற்காகச் சர்வ கட்சித் தலைவர்கள் கூடி ஆலோசித்ததை வரவேற்றும், 20—2—56ல் நடக்கும் பொது வேலை நிறுத்தத்தில் கலந்து கொள்வதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

### வடாற்காடு மாவட்ட தி.மு.க. பிரதிநிதிகட்கு:

"12—2—'56 பிற்பகல் 2 மணிக்கு மாவட்டக் கமிட்டிக் கூட்டம் திருப்பத்தூரில் வழக்கறிஞர் திரு. சாமி (நாயுடு) அவர்கள் இல்லத்தில் நடைபெறும். அவ்வமயம் 20-ந் தேதி நடைபெற இருக்கின்ற பொது வேலைநிறுத்தத்தின் நடைமுறைகளை வகுக்கவும் அதிகப்படியான உறுப்பினர்களைச் சேர்க்க திட்டம் வகுக்கவும் ஆலோசிக்கப்படும். ஆகவே மாவட்டப் பிரதிநிதிகள் இதையே அழைப்பாகக் கொண்டு தவறாமல் வர வேண்டுகிறேன்"

என்று, வடாற்காடு மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தோழர் முல்லை-சத்தி அறிவிக்கிறார்.

### முரப்பநாடு தி. மு. கழகம்

14—1—56 மாலை 6-30 மணிக்கு, முரப்பநாடு தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டம் தோழர் இரா. நாராயணன் தலைமையில் நடைபெற்றபோது, தோழர்கள் பி. மணியன், ஆ. சாமிநாதன், பி. சுப்பையா ஆகியோர் கழகவளர்ச்சி பற்றிப் பேசினர். பின்னர், மீண்டும் அவ்வூரில் பஞ்சாயத்துக் குழு ஏற்படுத்துவது என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### சேலம் 12-வது வட்டம் தி. மு. க. திறப்பு விழா

13-1-56 காலை 10 மணிக்கு, சேலம் 12-வது வட்ட தி. மு. கழகத் துவக்க விழா, தோழர் இ. ஆர். கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்றது. தோழர் சி. பி. சிற்றரசு கழகத்தைத் துவக்கிவைத்தார். தோழர் வி. சிவப்பிரகாசம் கொடியேற்றினார். தோழர்கள் ப. கண்ணன், சிற்றுளி எ. சுப்பிரமணியம், எ. மாரியப்பன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

### நெல்லைமாவட்ட தி. மு. க.

8—1—'56-ல், நெல்லையில், தோழர் கே. வி. கே. சாமி தலைமையில் நடைபெற்ற மாவட்ட தி. மு கழகக் கூட்டத்தில், நெல்லை மாவட்ட தி.மு கழக வரவு-செலவு கணக்குகள் பரிசீலனை செய்யப்பட்டு ஒப்புக்கொள்ளப்பட்டதுடன், பொதுக்குழு உறுப்பினராகத் தோழர் சண்முகம் அவர்களைத் தேர்ந்தெடுத்தும், அத்துக்குடி சதி வழக்கில் தண்டனை பெற்றுள்ள தோழர்கள் காசி, அருணாசலம் ஆகியோர்களை விடுதலை செய்யும்படி ஆட்சியாளர்களைக் கேட்டுக்கொண்டும், அண்மையில் பேராசிரியர் இருதயராஜ் அவர்கள் இயற்கை எய்தியமை குறித்து அனுதாபம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### சேத்தூர் தி. மு. கழகம்

9—1—56 மாலை 6 மணிக்கு சேத்தூர் தையற்கடையில் நடைபெற்ற கழக உறுப்பினர்கள் கூட்டத்தில், தோழர்கள் அ. செ. குழந்தைவேலன், வீ. தர்மன், இரா. தங்கவேலன் ஆகியோரை முறையே செயலாளர், துணைச் செயலாளர், பொருளாளராகக் கொண்ட நிர்வாகக் குழுவும், 9 பேர் கொண்ட செயற் குழுவும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

### கொள்ளுபிட்டி (இலங்கை) தி.மு.க. 3-ம் ஆண்டு விழா

8—1—56 பிற்பகல் 3 மணிக்கு, சின்னப்பொரலை செம்பல் பிலேஸ் பௌத்தப் பெண்கள் பாடசாலை மண்டபத்தில், சித்தார்த்தன் அரங்கில், தோழர் சு. கு. மாயக்கிருஷ்ணன் தலைமையில் கிளைக் கழக 3-வது ஆண்டு விழா சிறப்புறக் கொண்டாடப்பட்டது. தோழர் ஞா ஜோன், சாமிதாசன் அனைவரையும் வரவேற்றுப் பேசினர். தோழர் சு. கா. சுந்தரராசன் விழாவைத் துவக்கிவைத்தார். துணைக் கழகச் செயலாளர் தோழர் இரா. ச. பொன்னம்பலம் ஆண்டறிக்கை வாசித்தார்.

'பெரியார்', 'அறிஞர் அண்ணா', 'பகுத்தறிவும் பழங்குடி மக்களும்', 'தமிழர் பங்கு' ஆகிய பொருள்கள் குறித்த, இடலரங்கில் தோழர்கள் எஸ் டி சுப்பய்யா, மு. வெ. பெ. சாமி, மா. சே. அருள், இரா. அதிமணி ஆகியோர் சொற்பொழிவாற்றினர். பின்னர், மட்டக்களப்புத் தோழர் என். இராசு அவர்களது குழுவினரின் இசை விருந்தும் நடைபெற்றது. இறுதியில் தீர்மானங்கள் சில நிறைவேற்றப்பட்டதும், சத்தியவாணி முத்து கலை வளர்ச்சி மன்றத்தின் 'எங்கே நீதி?' நாடக நிகழ்ச்சியும் நடைபெற்றது. நாடகத்தையும், நடிகர், நடிகையர், சத்தியவாணி முத்து கலை வளர்ச்சி மன்றத்தின் கலைப் பணி ஆகியவை குறித்து, இ. தி. மு கழகச் செயலாளர் தோழர் இரா அதிமணி பாராட்டிப் பேசினார்.

### கொழும்பு (இலங்கை) தி. மு. கழகம்

1—1—56ல், கொழும்பு கிளைக் கழகப் பணி மனையில், தோழர் பி. எஸ் எ. கனி தலைமையில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில், ஆண்டு விழாவை வரும் பிப்ரவரியில் நடத்துவதெனவும் பிரச்சாரக் குழுச் செயலாளராகத் தோழர் பி. எஸ். எ. கனி அவர்களைத் தேர்ந்தெடுத்தும், பொறுப்பாளர் பதவியிலிருந்து தோழர் பா. ச. கீதம் அவர்களை நீக்கிவைத்தும், இலங்கையிலிருந்தே தாயகம் செல்லும் தோழர் பால சிவந்திரராசன் அவர்களது விலகுதல் கடிதத்தை ஏற்றுக்கொண்டும், முடிவுகள் செய்யப்பட்டன.

### பம்பாய் தி. மு. கழகம்

15—1—56 காலை 10½ மணியளவில் பம்பாய் மாதுங்கா—போதார் கல்லூரி மண்டபத்தில், பம்பாய் தி. மு. கழகப் பொது உறுப்பினர் கூட்டம் தோழர் எஸ். தியாகராசன் தலைமையில் நடைபெற்றது. தோழர் எல். என். செழியன் அனைவரையும் வரவேற்றார். தோழர் எஸ் வன்னியராயகம் சொற்பொழிவாற்றினார். பின்னர், தோழர் கண்ணதாசன் பம்பாயில் கழக உறுப்பினர்கள் காத்துக் கொள்ள வேண்டிய கண்ணியம், கட்டுப்பாடுகளை விளக்கி, தாயகத்தில் கழகங்கள் இயங்கிவரும் நிலைகளையும் நன்கு விளக்கி சொற்பொழிவாற்றினார்.

26—1—56 காலை 11 மணிக்கு, தாராவி கிளைக் கழகப் பணிமனையில், தோழர் எஸ். தியாகராசன் தலைமையில் நடைபெற்ற பொதுக் குழுக் கூட்டத்தில், தோழர் கண்ணதாசன் அவர்களது பொதுக்கூட்ட வரவு-செலவுக் கணக்குகள் ஒப்புவிக்கப்பட்டன.

### தாணா—பம்பாய் தி. மு. க.

26—1—56 மாலை 6½ மணிக்கு, கிளைக் கழகச் செயற்குழுக் கூட்டம், தோழர் எம். இராசகோபாலன் தலைமையில் நடைபெற்ற போது, கிளைக் கழகச் செயற்குழு, மற்ற உறுப்பினர்களுக்கான சந்தா பற்றிய முடிவு செய்யப்பட்டது.

### தாராவி—பம்பாய் தி.மு.க.

5—1—56 இரவு 7-30 மணியளவில், 'திராவிடர'கத்தில், தோழர் த. மு. பொற்கோ தலைமையில் நடைபெற்ற கிளைக் கழகச் செயற்குழுக் கூட்டத்தில், கழக நிகழ்ச்சிகள் ஒப்புக்கொண்டும், செயற்குழு உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் கட்டாயமாக ஐந்து உறுப்பினர்களைச் சேர்த்துக் கொடுக்கவேண்டுமெனவும், 5 பேருக்கு அதிகமான உறுப்பினர்களைச் சேர்த்துக் கொடுக்கும் செயற்குழு உறுப்பினர்கட்கு நற்சாட்சிப் பத்திரம் கழகத்தின் சார்பாக வழங்குவதெனவும் முடிவு செய்யப்பட்டதுடன், மற்றுமொரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

### கொலாபா—பம்பாய் தி.மு. கழக 3-வது ஆண்டு விழா

17—1—56 இரவு 8 மணியளவில், காமா மண்டபத்தில் விழா நடைபெற்றது. தோழர் க. க. செகநாதன், தோழர் கண்ணதாசனை வரவேற்றார். தோழர் ஏ. எஸ். அன்பரசு கழகக் கொடியேற்றிவைத்தார். தோழர் கே. கே. இராமநாதன் அண்ணா அவர்கள் படத்தைத் திறந்துவைத்துச் சொற்பொழிவாற்றியபின் தோழர் எஸ். தியாகராசன் கழக வளர்ச்சி குறித்துப் பேசினார். இறுதியில் தோழர் கண்ணதாசன் நீண்டதோர் உரை நிகழ்த்தினர்.

# சுதந்திர தினத்தன்று கருப்புக் கொடி ஏற்றப்பட்டது

## இலங்கையில் நடவடிக்கை

கொழும்பு, பிப். 5— இலங்கைக்கு வடக்கில் தமிழர் பெரும்பான்மையாக வாழும் பகுதியில் இலங்கையின் சுதந்திர தினத்தன்று கருப்புக்கொடிகள் பறந்துகொண்டிருந்தனவாம்!

இதரப் பகுதியில் சுதந்திர தினம் வழக்கம்போல கொண்டாடப்பட்டது என்று கூறப்படுகிறது.

தமிழ் பகுதிகளில் அரசாங்கம் நடத்திய சுதந்திர தின விழா நிகழ்ச்சிகளில் மக்கள் அதிகமாகக் கலந்துகொள்ளவில்லை, என்றும் கூறப்படுகிறது.

சுதந்திர தின விழா அணிவகுப்பில், மக்கள் சபையில் உள்ள தமிழ் உறுப்பினர்கள் கலந்து கொள்ளவில்லை என்றும் தெரிய வருகிறது.

'சிங்களத்தை மட்டுமே அரசாங்க மொழியாக்குவது' என்ற சர்க்காரின் அநியாயப் போக்கை எதிர்த்துத் தமிழர் தலைவர்கள் விடுத்திருந்த வேண்டுகோளுக்கு இணங்கவே கருப்புக்கொடி பறக்கவிடப்பட்டிருக்கிறது.

## கழகக் கூட்டம்

★

கல்லக்குடி

8—2—56 மாலை 6 மணிக்கு

தலைவர் :

அ. தம்புசாமி

பேசுவோர் :

ஈ. வெ. கி. சம்பத்

எம். எஸ். மணி

செங்குட்டுவன்

### திருக்குறள் வகுப்பு

சென்னை — பெத்துநாய்க்கன் பேட்டை தாய்மார் கழகச் சார்பில் 7—2—56 பிற்பகல் 2-30 மணிக்கு மேல் சென்னை முத்துக்கிருஷ்ணன் தெரு, 15. எண்ணுள்ள இல்லத்தில் திருக்குறள் வகுப்பு நடைபெறும். 'செங்கோன்மை' என்பது குறித்து மயிலை - சிவமுத்து அவர்கள் சொற்பொழிவாற்றுவார்

***

## தேவிகுளம், பீர்மேடு : தி. மு. கழக விளக்கம்

**சென்னை—அயன்புரம்**

(மார்க்கெட் மைதானத்தில்)

7—2—56 மாலை 6 மணிக்கு

**வ. தங்கசாமி**

தலைமையில்

**கண்ணதாசன்**

**இளம்பரிதி**

பேசுவர்

***

# நாயும் அறியும் மண் அருமை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சேர்ந்து, தமிழ் நாட்டின் எல்லைகளைப் பாதுகாக்க முனை அமைத்திருக்கின்றனர்; நாடு போர்க்கோலம் பூண்டிருக்கிறது.

'இப்போது காமராசர், செங்கம் எனும் ஊரில் கூறினாராம். 'எதிர்க் கட்சிகள் எல்லாம் சேர்ந்து போராட்டம் நடத்தப் போகிறார்களாம்; ஏன் இவர்கள் வந்து என்னிடம் சொல்லக்கூடாது? — என்று!

"நான் உங்களிடம் சொல்லியிருந்தேனே, ஒரு சிறு காரியம்—என்னவாயிற்று? 'கல்லக்குடி' பற்றிப் பேசும்போது குறிப்பிட்டிருந்தேனே - விளைவு என்ன? உங்களால் முடிந்ததா, பெயர் மாற்றம் செய்ய?

"தேவிகுளம், பீர்மேடு பகுதிகளைத் தமிழகத்துடன் இணைக்க, காமராசருக்கு இலாயக்கில்லை என்பதைத் தெரிந்து கொண்டதால்தான் எல்லா கட்சியினரும் ஒன்றுபட்டிருக்கிறார்கள். காமராசருக்கு, அந்தக் காரியத்தைச் செய்வதற்குத் தேவையான 'நாட்டுப் பற்று' இல்லை என்பதை நாங்கள் உணர்ந்திருக்கிறோம்.

"நாட்டை ஆண்ட பி. டி. இராசன், உமை வந்துபார்க்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்! ஒன்றுபட்டிருக்கிற எந்தக் கட்சித் தலைவர்களும், காமராசர் உட்கார்ந்திருக்கிற இடத்தில் அமர்ந்து பணியாற்றப் போதுமான தகுதி பெற்றவர்களல்லர் என்று காமராசரேகூடச் சொல்லிவிட முடியாது; அப்படியிருக்க, இவர்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து காமராசரிடம் காவடி தூக்க வேண்டுமாம்! அடேயப்பா, எப்போது இவர் அவ்வளவு பெரிய மனிதரானார்?

"எனவே, காமராசரல்ல நாட்டு மக்களால் முக்கியமாகக் கருதப்படவேண்டியவர்; கவனிக்கப்படவேண்டியதெல்லாம் பிரச்சினையே தவிர, 'காமராசர் என்ன சொல்கிறார்' என்பதல்ல!"

இவ்வாறெல்லாம் கூறிய அண்ணா அவர்கள், பிப்ரவரி 20-ந் தேதி வேலை நிறுத்தம் குறித்து அரிய கருத்துக்களை வழங்கினார்.

அவரது சொற்பொழிவின் இதர பகுதிகள் முன்பே வெளிவந்திருக்கின்றன.

அண்ணா அவர்கள் கலந்துகொண்ட அந்தக் கூட்டத்திற்கு வட சென்னையில் காங்கிரசாரால் வீழ்த்தப்பட்ட தோழர் கே. எஸ். பாண்டியன் அவர்களது தம்பியும், கழக வளர்ச்சியில் மிகுந்த அக்கறையும் கொண்ட தோழர் கே. எஸ். அருணாசலம் தலைமை வகித்தார்.

தோழர்கள் காஞ்சி-கல்யாணசுந்தரம், முகவை-ஆஸ். எஸ். பாண்டியன் ஆகியோர் பேசினர்.

ஓவியத் தோழர் பழநி தீட்டிய 'ஆசியாவின் ஜோதி அளித்திடும் நீதி' என்ற நிலைமை விளக்க ஓவியம் மேடையருகே காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தது.

கூட்டத்திற்கு பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன், ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ., இரத்தின பாலகுருசாமி, தோழியர் சத்தியவாணிமுத்து, சண்முகம் எம். எல். ஏ., கலைத்தூதன், கண்ணதாசன், தில்லை-வில்லாளன், தோழியர் அலமேலு அப்பாதுரை, அன்பழகன், இளம்பரிதி, வாணன், செழியன் ஆகியோர் வந்திருந்தனர்.

மேடை பலவண்ண மின் விளக்குகளால சிறப்புற அமையப்பெற்றிருந்தது.

இலட்சத்திற்கு மேலான மக்கள் திரண்டிருந்து அண்ணா அவர்களின் கருத்துரை கேட்டு பயன் பெற்றனர்.

கூட்டத்திற்கான ஏற்பாடுகளை தோழர் கே. எம். கண்ணபிரான் பெருமுயற்சியில் சிறப்புடன் செய்திருந்தார்.

தோழர் சேதுராசன் நன்றி நவில கூட்டம் இனிது முடிவுற்றது. (ந-கி.)

# ஜெயப்பிரகாஷ் நாராயணன்

பிரஜா - சோஷலிஸ்டு கட்சித் தலைவராக இருந்து இப்போது அரசியலிலிருந்து விலகி பூதானப் பணியாற்றி வரும் தோழர் ஜெயப்பிரகாஷ் நாராயணன், மாநில சீரமைப்புப்பற்றி திட்டவட்டமான கருத்துகள் கொண்ட ஓர் விளக்க அறிக்கை வெளியிட்டுள்ளார். அதில் அவர் குறிப்பிடுவதாவது :-

1. மொழி வழி அரசு அமைவதே நல்லது; அது, நாட்டில் பிளவு, குறுகிய மனப்பான்மையை மூட்டிவிடும் என்று பேசுவது சுத்த அபத்தம். மொழி வழி அரசு அமைக்க மறுத்தால் தான் அநீதியும், அக்கிரமும் தலைவிரித்தாடும்; ஆகவே, மொழி வழி அரசு திட்டம் உடனடியாக ஏற்பட்டாக வேண்டும்.
2. பெரிய அளவில் ராஜ்யங்கள் இருக்க வேண்டுமென்று எண்ணுவதும் தவறு; தீது பயக்கும்; உண்மையான தேசீயம் நிலைக்காது; நிர்வாகமும் சீர்குலையும்.
3. பீகார்—வங்காள இணைப்பு பெரும் பிழையாகும். சிறு திட்டுகள் சம்பந்தமாக ஒன்றுபட முடியாத இரு ராஜ்ய முதலமைச்சர்கள், இந்த இணைப்புக்கு எப்படி இணங்கி வருகிறார்கள் என்பதே புதிராகத்தான் இருக்கிறது.
4. பம்பாய், மராட்டியர்களுக்குத்தான் தரப்பட வேண்டும்; அப்போதுதான் மராட்டியரின் தேசீய அபிலாஷை நிறைவேறும். பம்பாயில் நடைபெற்ற கலகத்தைக் காட்டி, தடை சொல்லாமல், தயங்காமல் மத்திய சர்க்கார், பம்பாய் நகரை மராட்டியருக்குத் தந்துவிட வேண்டும்.
5. பொதுவாகவே, 'மொழி வழி அரசு இருக்க வேண்டும்' என்ற தத்துவம், தேசீயத்துக்கு முரண் அல்ல.

### 10,000 பேருக்கு வேலை கிடைக்குமாம்!

நாட்டிலுள்ள படித்தவர்களிடையே வேலையில்லாக் கொடுமையை ஒழிப்பதற்கு முதல் நடவடிக்கையாக, சிறிய தொழில் துறைகளில் பல நடைமுறைத் திட்டங்களைத் துவக்குவதற்குத் திட்டக் குழு ஒப்புதல் அளித்திருக்கிறது. அவற்றின் 2-வது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதல் வருடத்தில், படித்து வேலையற்றிருக்கும் சுமார் 10,000 பேருக்கு வேலை கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறதாம்.

# இலங்கை இந்தியர் சிக்கல்

## 'சுலபத்தில் தீர்வு காண இயலாதது'

### பம்பாய் முன்னாள் கவர்னர் கருத்து

லக்னோ, பிப். 3— "இலங்கையில் வாழும் இந்தியர் பிரச்சினைக்கு உடனடியான — சுலபமான தீர்வு கிடைக்குமென நான் நினைக்கவில்லை.

"அவ்வப்போது இரு பிரதமர்களும் கூடிப் பேச வேண்டும்; இன்னும் அதிகமாக இருதரப்பு அதிகாரிகளும் பேச வேண்டும்.

"இப்போது 9 இலட்சம் பேர் வரை உள்ள இந்தியர்களின் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டும் என்ற இடைவிடாத ஆவல், எல்லா வகுப்பையும், வர்க்கத்தையும் சேர்ந்த சிங்களவரிடை நிலவுகிறது.

"இலங்கையில் சம்பாதித்த பணத்தை இந்தியாவிற்கு இந்தியர்கள் அனுப்பிக்கொண்டே இருப்பதாகக் குற்றம் கூறப்படுகிறது.

"இலங்கையில், இரண்டாவது, மூன்றுவது தலைமுறையினராகவாழும் இந்தியர்கள் கூட, தங்கள் தாயகம் பற்றித்தான் கவலைகொள்கிறார்களே தவிர, இலங்கையைப் பற்றிக் கவலைப்படுவதில்லை என்றும் கூறப்படுகிறது.

"இந்திய மக்களின் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டும் என்பதற்கு பொருளாதாரக் காரணங்களே மிக முக்கியம் என்று நான் கருதுகிறேன்; இதில், வேலையில்லாத் திண்டாட்டம் என்ற சிக்கலும் அடங்கியிருக்கிறது.

"மேலும், இந்திய வியாபாரிகள், லேவாதேவிக்காரர்கள் ஆகியோர் பற்றி ஒரு வகையான வெறுப்புணர்வு இருக்கிறது. இதன் விளைவாக இலங்கை சர்க்கார் ஒரு சில இந்தியர்களுக்கு மட்டுமே வாக்குரிமை அளிப்போம் எனப் பிடிவாதம் பேசுகின்றனர்.

"இலங்கையில் உள்ளோரில் பெரும் பகுதியினர் சென்னையிலிருந்து வந்த தோட்டத் தொழிலாளர்கள்தான்; இந்தியத் தொழிலாளர்கள், கடினமாக உழைப்பவர்களாகவும், சட்டத்திற்குக் கட்டுப்பட்டு நடப்பவர்களாயும், சிக்கனமாக வாழ்பவர்களாயுமிருக்கின்றனர்.

"இந்த நல்ல அம்சங்கள், ஆச்சரியப்படத்தக்க வகையில் இந்தியர்களின் பிராபல்யத்திற்கு விரோதமானவையாக இருக்கின்றன,"

என்று, பம்பாயின் முன்னாள் கவர்னரும், ஆங்கிலிகன் தேவாலயத் தூதுக் குழு உறுப்பினர் என்ற முறையில் அண்மையில் இலங்கையில் சுற்றுப் பயணம் செய்தவருமான ராஜா மகாராஜ் சிங் என்பார் பத்திரிகையாளரிடம் தெரிவித்திருக்கிறார்.

### ஏப்ரலில் வந்துவிடும்!

'அம்பர் சர்க்கா' நூலினால் நெய்யப்படும் கைத்தறித் துணி வருகிற ஏப்ரலில் 'மார்க்கெட்'டுக்கு வந்துவிடுமாம்.

# சென்னையில் மாநில மாநாடு நிதி அளிப்புக் கூட்டம்

## மண்ணடியில் மக்கள் வெள்ளம்

5—2—56 மாலை 6 மணிக்கு, சென்னை—மண்ணடி பவழக்காரத் தெரு, காளத்தீஸ்வரர் கோயில் முன்னிலையில், 11-வது வட்ட தி. மு. கழக மாநில மாநாட்டு நிதியளிப்புக் கூட்டம் தோழர் பி. வீரராகவன் தலைமையில் நடைபெற்றது.

தோழர் மு. பெருமான் சிறிது நேரம் பேசிய பின்னர், 11-வது வட்ட தி. மு. கழகப் பொருளாளர் தோழர் இராதாகிருட்டிணன் மாநாட்டு நிதிக்காக ரூ. 100-ஐ அண்ணா அவர்களிடம் தந்தார்.

தோழியர் ஜி. கஸ்தூரி அவர்கள் இயக்கப் பாடல் சில பாடினார். அண்ணா அவர்கள் பெருத்த ஆரவாரத்திற்கிடையே எழுந்து தேவிகுளம்-பீர்மேடு பிரச்சினையைப் பற்றி பொது மக்கள் புரிந்துக்கொள்ளும் வகையிலும், நேரு சர்க்காரின் நேர்மையற்ற போக்கினை விளக்கியும், தமிழ்ப் பகுதிகளிடை வாக்கெடுப்பு நடத்த வடநாட்டவர் தயார்தானா என அறைகூவலிட்டும், நம் ஒற்றுமையைக் காட்டும் வகையில் பிப். 20-ந் தேதி அமைதியாக - வெற்றியுடன் செயலாற்ற வேண்டுமென்று கேட்டுக்கொண்டும் அரியதோர் உரை நிகழ்த்தினார்.

கூட்டத்திற்கு இடம் கொள்ளாத அளவுக்கு, இலட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் திரண்டிருந்தனர். (ந. - கி.)

# வடக்கும்-தெற்கும் ஒன்றுபட......

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

"இந்தியாவில், வடக்கும்—தெற்கும் இணையாமலிருப்பதற்குக் காரணம், இரண்டு பகுதிகளுக்குமிடையே போதுமான தொடர்புகள் இல்லாதிருப்பது தான்!

"இவை இரண்டிற்குமிடையே நெருங்கிய தொடர்புகள் ஏற்படாதவரையில் மக்களும், அவர்களது நோக்கமும் ஒன்றுபடுவது — ஒற்றுமைப்படுவது நடைபெறாத காரியமாகிவிடும்"

என்றும், சர்தார் பணிக்கர் கருத்தறிவித்ததாகத் தெரியவருகிறது.

'இந்தியாவின் அடிப்படை ஒற்றுமை' என்ற பொருள்குறித்து டாக்டர் சி பி இராமசாமி அய்யர் பேசிய கூட்டம் ஒன்றுக்கு தலைமை வகிக்கும்போதுதான், பணிக்கர் இவ்வாறு குறிப்பிட்டாராம்.

### இராமசாமி அய்யர் தரும் யோசனை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தேவை என்பது ஒப்புக்கொள்ளப்பட்டால்தான் இந்தத்தொடர்புகள் ஏற்படுத்துவது சரியானதாக இருக்க முடியும்."

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

